உ

சிவமயம்.

# ஸ்ரீ அகோராந்தாதி.

இஃது

திருவெண்காட்டி லெழுந்தருளியிருக்கும்

அருட்கடலாகிய

ஸ்ரீ அகோரமூர்த்தியை அவர் சீரடியாரடியான்

## சிவாநந்தன் பாடியது.

அரிமழம்.

மகா-ள-ள ஸ்ரீ கா. ச. சி. ச. சடையப்பசெட்டியாரவர்களால்

தஞ்சை

ஸ்ரீவித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

1906.

உ

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ அகோராரந்தாதி.

காப்பு.

பூவார் பொழிற்றிருவெண் காட்டில்வாழும் புனிதனும்ப
ராவார் பெருந்துன் பொழித்திடத் தோன்று மகோர னுக்கென்
ணுவார் சொன்மாமலர் கொண்டொரந்தாதித் தொடைநவிற்று
மாவார் பெரும்வாரணப் பிள்ளையார்தம் மலர்ப்பதமே.

சீரார் திருவடி யென்சென்னி மன்னித் திகழவைத்துப்
போராருநற்புகழ் பேசவைத் தானந்தப் பேறளித்தா
யாரார்முடிய வென்னையாவகோர வருட்கடலே
காரார்வடிவ கைம்மாறுளதோ கடையேன் செயவே. (1)

செய்யாள் விரும்பத்திருமலி வெள்வனத்தே திகழு
மையா வகோரவரசே மருத்துவனுற்றுதுயர்க்
கெய்யா விமையவர் மாதவரேத்த விடரொழித்தாய்
துய்யா வடியனைச்சூழ் பகைமாற்றிச் சுகமருளே. (2)

சுகமுந் தொடிக்கணப்பூவையும் பூசுரர் சொல்லிசைசேர்
நிகமம் மடுத்துடனேயமிக் கூற நிகழ்த்துபொழிற்
ககநற் சுவேதவனத் தெனையாண்ட வகோரசிவ
தகநின் னடிக்கணலன் பொன்றுதந்தாட மியனுக்கே. (3)

கேளார் வறியம் வறியமென்றே சொலுங்கீழ் மொழியும்
மூளார் மறந்தும் பிறர்தீங்கிற்சூல முதற்றரியெண்
டோளார கோரர் துணைப்பதமன்றிச் சுரருலகும்
வேளார் விழாநிறை வெண்காட்டில் வாழ்கின்றமேலவரே. (4)

மேலவர் நற்றிருக்கூட்ட மெந்நாளு மன்மேவவவர்
காலவிர் நாயடியேன்றலைசூட விற்காமனைவெல்
பாலவிர் நீறணிந்தைந்தெழுத் தோதப் பணித்தருள்வாய்
நீலவிர் மேனியகோர சிவேச வென்னெஞ்சினனே. (5)

சினவடி வானவன் சூலமதாதிச் செருபடையா
னனன்முடி யான்மிகக்கோர னகோரனல் லன்பிலர்க்கு
மனன்முடி நற்பதம் வைத்தவனுமம் வழுத்துநர்க்கோ
புனன்மிகு வெள்வனத்தை யனல்லான்றற் புருடனுமே. (6)

தற்புருடாதி முகநான்கினுஞ் சதுர்மறைகள்
வெற்புருவாகக் குவிந்திடவிண்டவன் மேற்பிறவி
நிற்பதற்கஞ்சி நசித்திடச்செய்தென்ற னெஞ்சினிலே
பொற்பமர் ஞானவடிவன கோரன் புகுந்தனனே. (7)

புகுந்தே னகோரனின் பொன்னடியே நற்புகலிடமாய்
மிகுந்தே னகத்தினின் மெய்யுணர்வானந்தவெள்ளநனி
முகுந்தே னமாகிமுய ன்றறியாப்பதமுண்டகத்தாய்
யுகுந்தேன் பொழிற்பொனியோடும் வெண்காட்டுறையுத்தமனே()

வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையினர்மேவலபின்
புண்காட்டு தீவினையென்னவெந்தைநற் புகலியர்கோன்
கண்காட்டு பாலரைக் கைகாட்டுபாலர்சொல்கம்படிந்தேன்
விண்காட்டு மேனியகோரேச வென்றன்மெலிவகற்றே. (9)

கற்றேன்பலகலையப் பொருள்யாவுங்கருத்தினன்காய்
வுற்றேயுணர்ந்தன னுன்னையல்லாலொன் றுலகெனவே
சற்றேயெனினுந் தனிக்கண்டிலேன் பிறசார்பனைத்து
மற்றேயகோரனைப்பணிவார் தொண்டனாயினனே. (10)



ஆயிழைமார்தர் தனம்புகழ் மக்களரோகதிட
காயநற்கல்விமதிகால காலன் கழலிணையிற்
றாயமுற்பத்திதுறக்கமு மெய்துஞ்சுவேதவனம்
ஞாயிறுசென்றங்ககோரேசர் காட்சியைநாடினர்க்கே. (11)

நாடினனுன்மனத்தெந்தையகோரனை நான்மறையுந்
தேடினனுண்மலர்ப்பாதமுன் செய்ததிருவினையாற்
சூடினனென்றலைசூடிடுந் தூயவர்தொல்குழுவிற்
கூடினன்கூற்றுந்தொலைந்தனன் யாதுங்குறையிலையே. (12)

இலையேயொருகுறையேனு மெனக்கினியேழையர்தஞ்
சொலையேமறையெனத்தோளே துறக்கந்துவரிதழே
விலையேயிலாதநன்மாமருந் தென்னவெறிகொடுழல்
புலையேழைப்பாழ்மதிபோயதகோரனிற்போற்றிடவே. (13)

போற்றிடநாவும்புனலிடன் காண்பரும்பொன்னடியிற்
றாற்றிடமாமலர்கையு நிற்சூழத்துணைப்பதமு
நீற்றிடநெற்றியுநேய நன்னெஞ்சுமன்னீயழித்தாய்
பாற்றிடச் சூலப்படையா யகோரனிற் பாடுவனே. (14)

பாடுவர்வெள்வனத்தையன் றிருப்புகழ்பாவவினை
சாடுவர்சந்ததந்தத்தொந் தொந்தத்தகந்தத்தெனவே
யாடுவர்பேரறிவானவ கோரனையன்புடனே
கூடுவர்கூடத்தனிச்சிவ மாமென்பர்கோவிதரே. (15)

கோவியர்கோங்கவிர்குங்குமச் சாந்தணிகொங்கையின்மேற்
றுவியளாய்த்திளைமாலவன் றேடுன்சரண்டனிலே
யோவியமென்னவென் னுள்ளமுறற்கோருபாயமுரை
பாவியர்க்கெட்டரும் பாதவகோரபழம்பொருளே. (16)

பழமாறை யனந்தம் முகங்கொண்டும் பகரவெட்டாய்
மழமானவே யழுதோலிடுமன்பர் மனத்திடையே
விழமானன் ஞானவிளக்கா யொளிர்வவை மெல்லியலார்
குழன்மா வனந்திரி யென்னெஞ்சகோர குரைகழற்கே. (17)

குரைகடனித்தில மாமணி கொண்டுகுவிப்ப குல
வரைகடஞ்சால மெனவேய கோரவவ்வாண்மலிந்தோ
மரைகடமான் கணோர்மாதர் முறுவல் வயக்கத்தினோ
வுரை கடமக்கரியாய் பெயர்வெள்வனமுன்பதிக்கே. (18)

பதியே யமரர் பதிக்கும் விதிக்கும்பொன் பார்பதிக்குங்
கதியே பிறவிக்கடலிற் கலங்கினற் கங்கருணை
நிதியே யகோரநிமலா நிகிலநின்னீள் புகழின்
றுதியே யமுத மழையெனச் சொல்லநற்சொல்லருளே. (19)

சொல்லு நினைவுங்கடந்தொளிர் சோதிச்சுகவடிவே
யல்லும்பகலு நின்னம்புயப் பாதத்திலன்புவைத்தே
புல்லும் வணஞ்செயலுன் கடனே கடற்பொங்கிமிழை
வெல்லு மறையொலி வெண்காட்ட கோரநல்வித்தகனே. (20)

வித்தகனே வெண்பொடிபடவேளை விழித்தவிழி
மத்தகனே மத்தகவுரியாய் நிகமாகமத்தின்
புத்தகனே புலனைந்தையும் வென்ற புரையிலன்பர்
சித்தகனே யென்ன கோரசிவாவுனைச் செப்புவனே. (21)

செப்பிளங்கொங்கையர் வேட்கையினாற் றினஞ்சிந்தைநைந்தே
யெப்புலனுந் திகைத்தேயலைந்தேனை யிபமனண்ணா
விப்பதிவாவென்றழைத்து னிணைப்பதமென்றலைமேல்
வைப்பதெற்கெந்தை யகோரவென்யான் செய்தமாதவமே. (22)



மாதவனாயிரமாமனைப் போதுண்மறையவொன்று
போதவனாதன்னயனம்பறித்து னம்பொன்னடியின்
மீதவனார்கொடுசாத்திடச் சக்கரமீந்தவகா
ஆதவனாயிரந்தேசவ கோரவருட்கடலே (23)

கடலேயனையம் யாங்கல்வியாலென்னக்களிமிகுத்து
மடலேவரைந்துபுன்மாதரை யெண்ணிமனமழிந்தே
யுடலேவிழுமளவும் முனையுன்னுருறவுகொளா
தடலேறுகைத்தவகோராவரு ளெம்மடிகணட்பே. (24)

நட்புக்கொண்டாய்கல்விசெல்வ மிரண்டினுநாவலர்கோன்
பெட்புக்கொண்டான் பனைசென்றிருகாலிற்பிரியமுடன்
உட்புக்கொண்டார்குழலூட லொழிகென்றுரைத்தனையால்
கொட்புக்கொண்டாரறியாதவ கோரகுறித்தனனே. (25)

தனமேபொருளென்றிறு மாந்தறிஞரைச்சற்றுமெண்ணார்
முனமேசெலாதுனன்மொய்ம்புகழ் பாடிமுடிக்கரங்கூய்
மனமேகனிந்தபேரானந்த மாக்கடன்மன்னவருள்
ளனமேய்வயற்றிருவெண்காட்ட கோரவரும்பொருளே. (26)

அருப்புமலர்கொண்டுனம் புயப்பாதத்தகநிறைந்த
விருப்புடனிட்டசாம்ப சதாசிவவேதவெள்ளிப்
பொருப்புரைதேவபொன் னம்பலவாதி புலீச்சரவென்
றுருப்புளகோடுனை யோதவகோரவுன்னுன்மனத்தே. (27)

மனத்தேயகிலவுலகமுந் தோன்றிமறையுமுன்சிற்
கனத்தேசலாதிதற்கெந்தையகோர கருதிடிற்சொப்
பனத்தேயெனச்சிறிதும் முண்மையின்றனிற்பாரனைத்துஞ்
சொனத்தேசொன்மாத்திர மாமணிபோலச்சொலிலிலையே. (28

இல்லை நன்னகரில்லி துபோது மெழிற்றிருவென்
றெல்லையிலா நிதிக்கோன் விழைந்தெய்து நின்னிப்பதிநீத்
தொல்லையில் வேள்விய கோராவு ஞற்றுவருன்பொருட்டில் [கே.
பொல்லையென்பார் சொலினென்னோ வுடைத்திதிற் பொன்னுல

பொன்னலர் மா திருவெண்காட்டில் வாழும் புராந்தசவுன்
றன்னலர்மாமரைத் தாடொழு மன்பர்க்கித்தாரணியி
லொன்னலர் நோய்மிடி யுள்ளக்கலக்க முறுவதுண்டோ
சொன்னலர்போற்றுமகோரா சரணந்துணிபருளே. (30)

அருளே யுருவெனத் தோன்று மகோரவமரரகம்
வெருளேநிறைந்திட வெம்போர் விளைத்த வெறுங்கொடியோ
னருளே யெடுத்திறக்கச் செய்தவாஞ் மிறேசைசெய்யுஞ்
சுருளேய் குழலியர்ச் சூழாதெனைக் கொளுன்றொண்டினுக்கே. ()

தொண்டரின் றொண்டினுக்கே யகம்வைத்த தொழும்பனியான்
கொண்டலின்மேனிய கோரேச நாளுங்குரைகழற்கே
யொண்டரு மாமலர்மாலை யொடுன்புகழோதுகின்ற
பண்டருபாவலங்கன் மிகச்சார்த்தப்பணிக் குதியே. (32)

துதியோரிரண்டையுஞ் சிவனிப் பக்கங்குவித்தனலை
மதியேறிடத்துரப் பாவவ்வமுத மழைபொழிந்தென்
மதியோர்மிகுத்த நின்மாமலர்ப் பாதத்தின் மன்னிடச்செய்
விதியோர்நல்விடுறுவெண் காட்டகோர விழுத்துணையே. (33)

விழுமந்துடைத்திய கோராவிதுச்சுடவேள் வினின்று
மெழுமம்பெளியடன் மார்பம்பொறுதினி யென்செய்வலென்
மழுமம்பருவி யெனச்சோரமார் பத்தணையிலந்தோ
விழுமந்தணு வெனும் வெண்காடெனுறி லென்மெல்லியலே. (34)



மெல்லியலார் காவிரிப் புனலாடவம் மெய்யினிற்றேய்
சொல்லியலாதவிரை கடலுற்றதிற் றேய்பரத
வல்லியர்மேனிப் புலாலோட்டிச் சத்திமக னிகர்க்குந்
தொல்லியனற்றமிழ் வெண்காட்ட கோரதொழு தனனே (35)

தொழுவார்கரஞ் சிரந்தூக்கி நன்னுன்மறைத் தோத்திரத்தான்
கழுவார்தரச்செய்த மணைநங்காத்த கௌணியர் வாக்
கெழுமார முதைப்பருகி நல்லாநந்தத் தேயிருப்பா
ரழுவாருவகை யினையனகோ ரன்னடி யவரே. (36)

அடியார்பொருட்டுச் செயற்கருஞ் செய்கை யளப்பிலவே
தொடியார்கரத்தினர் சூழலிற்பட்டுத் துயருழக்கு
மடியார்மனத் தனைத்தேற்றி யுன்பாதம் வணங்குவித்தப்
பொடியார் தரச்சிரஞ்செய் யிலகோர வென்புண்ணியனே. (37)

புண்ணியனே புலனைந்தையு நீத்தநற் புந்தியருக்
கண்ணியனே மிகச்சேயவனே யுளத்தன் பிலர்க்கார்க்
கண்ணியனே கருணாகரனே யென் கருத்தினிலே
நண்ணியனே தாவகோர வுன்பாத நளினமதே. (38)

நளினம்படைத்துச் செவ்வாம் பலம்போதி நகைமுலைமொக்
கொளிரிருபா னலம்பூத்தங்குமிழ்கொ டொண்கோங் கரும்பி
மிளிர்கொடி வெள்வனத்தை யனகோரன் றன்வெற்பி லொன்று
குளிர்நிழற் சோலையிற் காண்கிலது வென்குல தெய்வமே. (39)

தெய்வத்திரு மறையோர் செயும்வேள்வி யின்றீம் புகைபோய்
மைவைத்தென வினன்மாணொளி மாய்ப்பவம் மாதவர்பூண்
சைவத்திரு நீற்றொழி யவ்வல்சாய்த்துத் தயங்குவெண்காட்
டைவித்த காவென்னகோ ராவருணின் னடிக்கணன்பே. (40)

அன்பே சிவமன்றி வேறில்லை யென்னவரு மறைகண்
முன்பே மொழிந்தனவென் கடவேன் முடைமுரலர்தம்
பின்பே யலைந்தெரிமே விழுதென்னப் பெரிதுநைந்தே
னின்பேயகோர விரங்காயினியுனை யெண்ணிடவே. (41)

இடம்பொருளேவலிம்மூன்றையுமெண்ணியென்னேழைநெஞ்
சடம்பொரு சாகரத்திற் றுரும்பென்னச் சலித்தனன்றோ [சந்
படம்பொரு மல்குலர் பாதம்வருடிப் பதைத்துருகு
மடம்பொருந்தா தருள்செய்வாயகோரவென் மாணிக்கமே (42)

மாணிக்கவாசக மாமறையோனு மெவ்வானவரும்
பேணிக்கை கூப்பும் பெருநாவலூரனும் பேரொளியைத்
தோணிக்கட் சுட்டு மென்றோன் றனும் வாக்கின் றுரையுஞ்
பாணிக்கழலில கோராவணியென் பருங்கவியே. [சொலும் (43)

கவிகை யொன்றாலிக் கடல் சூழ்புவனியுங்காப் பரம்பொற்
சிவிகை யொன்றேழ் முனிவர் பொறுத்தேக விண்செல்பசிறு
நவிகை யொன்றாவர் நதி மதி சூடுவர் நார் மிகுந்தே
குவிகை யொன்றாச் சிரத்தோடு மகோரனைக்கும் பிடினே. (44)

பிடியேயெனினும் வெண்காட்டினிற் பிச்சைபெரியர்க்கிடும்
மிடியேயறிகிலிராய் வியன்போக மிதப்பவுண்பீர்
துடியேரிடுகிடைத் தூய்மொழியார்நற் சுதர்ப்பெறுவீ
ரடியேயகோரன வீற்றிலடைவீ ரறிஞர்களே. (45)

அறியாருள விதகோரனடியிணைக் கன்புசெய்வா
ரெறியார்கலி சுலவிம்மணில் யாரெனினென்னவரே
நெறியார்பெரிய ரெனப்படுவார் மன்னினைக்கலரே
சிறியாரிதுவன்றிச் செப்புதல்வீணெனத் தேர்குமினே. (46)



மின்னேயனையவிம் மெய்யினை மெய்யெனவே நினைந்தப்
பின்னேர்குமிழியிற் செல்வ நிலையெனப் பித்தடைந்தும்
பன்னேர்விழவெனப் பாழ்படலின்றிப் பரங்கருணை
யன்னேயகோரவளி யனைக்கூட்டடி யாரவையே (47)

அவைக் கண்ணடித்தனம் போலவர்க் காவதன்றாமெனவச்
சிவைக் கண்ணறிந்து நடஞ்செயன் மானத்திரை முழவங்
துவைக்க நல்வண்டினம் பாடவந்தோகை சுழன்றகவுஞ்
சுவைக் கண்மலர்ப் பொழில் வெண்காட்டகோரதொலைமிடியே( )

மிடியேத கோரவிழை வன்றியவ்விழை வென்மனத்தே
குடியேற வின்றிக்குலைத்துன் குரைகழற்குஞ்சியிலே
யடியேனு யவைத்தெனல்லலெலா மொழித்தாரணத்தின்
படியே நடந்து பவக்கடனீந்தக்கண் பாரையனே. (49)

பார் தருமப்புனறீ வளியம் பரம் பானுமதி
யேர் தருமாவியமான னென்றெட்டுருவேய்ந்து நின்றாய்
வார் தருகொங்கை நல்லார் மயன் மாற்றி நின் மாண் பதத்தி
னூர் தருமே லோரறிவார கோர நின்னல்லுருவே. (50)

நல்லுருவுன் றனக்கை யாவகோர மெய்ஞ்ஞானமன்றிப்
புல்லுருயாவு மிப்பூ மிசை வாழுயிர் போத நண்ணி
யெல்லுருள் போற் சுழலாதுனலின் புருவெய்த வன்றோ
செல்லுரு வேய்ந்த வகோரா வருணற் சிதமெனக்கே. (51)

எனக்கே விதித்தனை கொல்லோவ கோரபல்லெண்ண மெல்லாம்
புனக்கே ழலாய் முலையக்கு ருளைக்கருள் புண்ணியனே
யுனக்கேய பயமபய மென்றோ விடலுத்தம நின்
மனக்கேறிலை யெனின் யானென்செய்வேனருள் வாரிதியே. (52)

வாரிதிநாப்பண் கலன்கவிழ்த்தே மனமாழ்குநர்போற்
பாரிதில்யாரும் புரப்பவரின்றி யுன்பாலணைந்தேன்
வேரிதிரண்டெழுந்தோடநெல்லெங்கும் விளைசிதக்காட்
டாரிதினந்தொழுமையாவகோரவகற்றினலே. (53)

இன்னலென்னுள்ளத்தி லெய்தியதின்ன தென்றியாதுமறி
மன்னவநீ யறியாததன்றாலுனல் வாய்திறந்து
சொன்னவ நான்மறையுச்சியிலொண்பொருடுயருடன்
முன்னவகோர நெஞ்செண்ணியதாங்கு முடித்தருளே. (54)

முடித்தலைவானவர் மாதவர்யோகியர் மொய்த்துனபொன்
னடித்தலை வீழ்ந்துபணித்திடவாகமகோரசிவ
துடித்தலைபா வணங்காவெனச் சோத்தஞ்சொலுன்றிருமுன்
செடித்தலை நாயினனென்சொல்லுவேன் கதிசேர்த்திடவே. (55)

சேர்கநல்லன்பரை வாயுனசீர்த்தி மன்செப்பகணீர்
வார்ககல்லாமனமா மலர்ப்பாதமது வருந்தித்
தேர்கபொய்வாழ்வைச் சிறிதுமெண்ணற்கத்திகழ்கவன்பு
வார்கமெய்யானந்தமென்றே யகோரவருண்மிகவே. (56)

மிகவேயுரைத்தெனல்விடுறன்மெய் யுணர்வின்றியின்றென்
னிகவேயிலாத மறைமொழியார்க்குமியையுமது
தகவேப்பிரமவித் தையன்றியாத வடங்குமிடம்
புகவேதகுமஃதகோரன் வெண்காடெனும் பொற்பதியே. (57)

பொற்பகலாத நற்பாமாலை கொண்டுனைப்போற்றிநிதங்
கற்பகலாத நன்மங்கையர்போலுன் கழலிணைக்கண்
ணற்பகலாத நெஞ்சோடலை வின்றியமையவெள்ளி
வெற்பகலாதவகோரா நினைநனிவேண்டுவனே. (58)



வேண்டு நடை நடக்கும் வெள்ளேறேறி வெண்காடெனுமின்
பாண்டு நடைச் செவிக்கையாவகோர நற்பத்தியின்றிக்
காண்டு நடையோவிய மெங்ஙனென்னக்கவலு நெஞ்ச
வீண்டு னடையர் வெறுங்க வியேறும் விதமெவனே. (59)

எவனெவ்வுயிர்த் திரளுங் கலந் தெங்கு மிருக்கு மிறை
யெவனம் மைதன்னோடும் வெள்ளிச் சிலம் பிலிலங்கிடுவா
னெவனெம்பிரம வித்தை கொழுநன் னெவனின்பநட
னவனென் மனங்கலந்தானந்த மீயு மகோரனன்றே (60)

அகோர நின்னம் புயவங்கிரிதன்னினலன்பு செய்தே
யகோரந் தொலைந்து பேரானந்தமாக் கடலாடவருள்
சகோரஞ் சசிபின் சரித்தெனச்சன் மந்தருங்கொடிய
பகோரம் படைத்தார்ப் பராயது போதும் பரம்பரனே. (61)

பரனே பருப்பத வல்லிபங்காநற்பழ மறையின்
சிரனே சிதவனத்தேவே பிறவித்திரையிலிடே
லரனே யெனத்துதியன் பருக்கன்றிங்கருள்வை கொலோ
வுரனேயருளென்ன கோரா வுனையுறவுள்ளத்திலே. (62)

உள்ளத்திலேயுறு மெண்ணங்கள்யாவு நன்கோய்ந்துசுக
வெள்ளத்திலே விழுந்தானந்த மேலிடவேயருள்வாய்
பள்ளத்திலே படு முத்த மகோர நிற்பாடுமவர்
கொள்ளத்திலே குவித்தாங்கொளிர் வெள்வனக் கொற்றவனே()

கொற்றவனேயிக்கு வலயங்காத்துக்கு லவுமறப்
பெற்றவனே யெனைப்பெற்றவனே வெறும் பித்தனென்னெஞ்
சுற்றவனே சுரர்போற்ற மருத்துவச் சூரனைமுன்
செற்றவனே யென்ன கோரசிவாவருள் சேவடியே. (64)

சவடிப்போதென் சிரமிசைச்சூடவின்றேமிதழிப்
வடிப்போதி லிடவப்புகலியர் பொற்புமிகு
வடிப்போத சுகந்தருநற்றமிழ் நாளுஞ்சொலப்
வடிப்போதகவெண் காட்டகோரவெற் பண்ணுகவே (65)

ண்ணூர்தவமொன்றுமே யைந்தெழுத்தை நற்பத்தியொடு
மண்ணூரிகமும் பரமுந்தருமுன்னெழில் வெள்வன
ண்ணூரகோர நின்னல்லடி யார்க்கனநல்கிமிச்சி
ண்ணூநடற் பொதிகாப்பாரவர்க் கென்னுரைப்பதுவே. (66)

ரைப்பதுவென் கடனுன்றிருநாம முளக்கருங்கற்
ரைப்பதுவுன் கடனையாவகோரகவலை கற்போ
ரைப்பதுங்கண்டிலை கொல்லோவருள்க வமுதுவட்க
ரைப்பதுமம்மலர் வாவிவெண்காடவென் ஞயகனே. (67)

யகனேயண்டம் யாவைக்கு நல்லிசைநான்குமறைக்
யகனேகருணாகரனே விண்கணிக்கவெழு
வயகனேர் பொழில்சூழ்திரு வெள்வனவித்தகனே
யகனேயென்னகோரா நினம்பொற் சரண்சரணே. (68)

ரணங்கிடந்தரி சக்கரமேற்கத்தரு மிறைவன்
ரணங்கிடந்தொளிர் புண்ணியமே னியன்புன்மைசெறி
ரணங்கிடந்தறியாதவனுன்னினர் காலனினுன்
ரணங்கிடந்தறியாமல கோரன்மன்வாழ்விப்பனே. (69)

ழ்விப்பர் வாக்குமனமுஞ்செலாத தன்மாண்பதத்தி
ழ்விப்பரானந்தவம்புதியிற் றனடியரைப்பின்
ழ்விப்பர்வேந்தர்பலரையு மன்னவர்மென்பதத்திற்
ழ்விப்பரெந்தையகோர ரடியர்சீர்சொல்லரிதே. (70)



சொல்லலரிதன்பர்மேன்மை யன்னார்திருத்தொண்டுசெய்யார்
புல்லலரிதெம்மகோரன் பொற்றுளது புல்லரிதேல்
வெல்லலரிதுவினைப் பிறப்பஃதுமைமேவிடுமே
லல்லலரிதிங்க கற்றிடத்தோர் மின்னவனியரே (71)

அவன்றெய்வமாவனிவன் றெய்வமாவனென்றையமுட
னுவன்றெய்மனத்தவர்கேண் மின்னுகர் பொருள்யாதுமின்றி
யெவன்றெய்வமாவிருந்தின் பளித்தான்றுயிலில்லிலங்கு
மவன்றெய்வமெந்தைய கோரனறிந்தின்பமார்மின்களே (72)

ஆர்மின்னகோரன்றிருப்புகழ்பேசி யவனடியார்ச்
சேர்மின்விகற்பமியாவுமிறந்து தெளிந்து சித்தம்
பார்மின்பரவடி வானந்தம் பொங்கிப்பரவசமாய்
வார்மின்கணீர் மிகமாயாவலியை மடக்குமினே (73)

மடக்குந் திரைக்கடல்வாசவன்றிக்குமற விதிக்கும்
குடக்கும் வடக்குங்கும்பன் கடக்காவிரிசோலவைக்க
ணடக்குஞ்சிதப் பதத்தேவொடகோரனை நான்கண்டுகும்
பிடக்கும் பிடக்குறைதீர்ந்தது தூர்ந்ததுபேய்ப்பிறப்பே. (74)

பிறவா திருக்க விரும்பிஞெருவன் பிறிதுதனற்
பிறவா திருக்க விருப்பவகோரனற் பேரருளா
லிறவா திருக்க விரும்பிஞெருவனெதுவுந்தனு
லிறவா திருக்க விருப்புகவென்னுமெழின் மறையே (75)

மறையேபுகன்று மகம்பலசெய்தென் மயிலியார்
பிறையேய்ந்திலங்கொண் குமுதப்பிரசம் பெருகவுண்டென்
கறையேய்ந் திலங்குபொற் கண்டனகோரன்கழலிணைக்கண்
ணிறையே நொளின்மனமின்ப வீடெய்து மிலையையமே (76)

ஐயம் புகுந்தகந்தூய்மை செய்தானந்தவாழி பொங்கி
மொய்யம்புகுமிரு கண்ணினராகி முகுந்தனந்த
னெய்யம் புகண்டிலரா யென்னகோரனிணையடிக்காட்
செய்யம் புலவர் திருவடிசூடுமென் சென்னிபதே. (77)

சென்னிமன்னித்திகழும் மென்னகோரன் றிருவடிக்கண்
பொன்னிமன்னித்திகழும் மிகப்புண்ணியம் பொற்புறமு
வன்னிமன்னித்திகழும் மறையோர் கண்மனைகளெங்கு
மின்னிமன்னித்திகழுங் கார்பொழிறூறும் வெள்வனத்தே. (78)

வனத்தோகையார் கடமைக்கணம்பேறுண்டு மானெனவே
மனத்தோகையின்றி வருந்திநைந்தேனையென் மன்ன மம்மர்
சினத் தோடவாவென்ற சீரியராம்பெருஞ் செல்வரினல்
லினத் தோடிணைத்தனையெந்தா யகோரவினியுய்வனே. (79)

உய்ம்மட நெஞ்சமேவெண் காடடைந்தென் றுரையரையர்
செய்ம்மடந் தீர்க்குந்திருப்பாசுர நனிதேர்ந்திலக்கண்
மைம்மடவார் பணிசெய்யமதித்தனைவான் மறைநேர்
பொய்ம்மடமாமனமே முன்னகோரன்புகழினையே. (80)

புகழ் வாரகோரன் பொருவில்புகழவன் பொன்னடிக்கே
திகழ் வார்திசைமுகனுதியர் செல்வமுஞ்சீரிதன்றென்
றிகழ் வாரிறைமறையாற்றிவிறையு மிழுக்கலின்றி
நிகழ்வார் நிதிதுனும்வெண்காட்டில் வாழ்கின்றநேயர்களே. (81)

நேயம் பொறையவாவாமை யுவப்பருணீதியிவர்
ஆயம் பயிலுந்தலைவியராந்திரு வன்பரையே
தோயம் புயத்துணையாயென்னகோர மற்றேய்வைகொலோ
மாயம் படைத்த மனத்தன்பிலாரெனுமாதரையே. (82)



மாதரைக்கண்ணார் மனவம்புயம்மலர் மாண்மறைச் செம்
பாதரைக்கண்ணார் பனவரையன்பரைப் பாவிநமன்
தூதரைக்கண்ணு வணஞ் சொன்னதூயனைத்தொண்டெனை
நாதரைக்கண்ணார் சிதக்கானகோரரைநண்ணுமினே[க்கொள் (83)

நண்ணியவெள்வன நாடியமாந்தருநாலெணறம்
பண்ணிய பேறுபடைப்பாரெனிலவண் பத்தியொடு
மண்ணியகோரன்றிருப் பணிசெய்வாரகந்தனிலே
யெண்ணியவெண்ணியாங்கெய்துபவென்றேனியம்பன்மனே. (84)

பன்னகத்தேயுன் பதநினைந்தியோகம் பயின்றிடுமால்
பொன்னகத்தே பொலிந்தும் மிதனுனிங்குப்போந்ததுகொல்
லென்னகத்தே யுறினென்னகத்தே யுறினென்னகத்தே
மன்னகத்தேசகோரன் னுறி னென்பவர்மாதிடமே. (85)

மாதிடனுகமதற் செற்றமாதவன் மாண்பதநற்
போதிடனுகப் புலிமுனிவாழும் புனிதவெண்கா
டேதிடனுக நீர்சேர்மினிரு மினிறுதிவலக்
காதிடனுகவகோரன் கழறுங்கதிமொழியே (86)

மொழிவிச்சுவேசனன் மாதவன்றுண்டிதண்டாயுதன்முப்
பழிதுச்சமாக்கும் பயிரவனெண்குகைபாகிரதி
யழிவச்சமில் வடமம்மணிகர்ணிகையாதியுள
பொழியெச்சமில்லருளெந்தை யகோரன்புரிவம்மினே. (87)

புரிவாற் புகலுகின்றேமல்லம் வெள்ளிப்பொருப்பிலரன்
அரிவாற்சலியமிக்கானந்த நட்டமிங்காடுதுநந்
தெரிவாற்பெரியரகோரர் சிதவனஞ்சிந்தித்தெனப்
புரிவாற் புகழ்ந்தவிவ்வெள்வனச்சீர்யார் பகருவரே. (88

பகருவராரணமாகமாதிப்பலகலையும்
நுகருவர்நூறுநூறுனந்தம்யாவும் நுதல்விழிவித்
தகருவர்வெள்வனத்தையரகோரர் சரணுறற்கே
நகருவரென்றலைபொன்னடி சூட்டிடுநற்றவரே (89)

நற்றவஞ்செய்ம்மினகோரன் வடத்தடிநண்ணிமண்ணி
லுற்றவஞ் செய்வதென்னுத்தாலகன்மகனேத்தனைத்துங்
கற்றவன்காலன்கடும்பாசம்யாப் பக்களைந்துளுமற்
செற்றவற்போற்றிவதிந்தனன்காணிச் சிதவனத்தே (90)

சிதமதிதன்னிலஞ் செங் கதிரோடுஞ் செறிபதம்பல்
விதமதிநீத் தலைவேலையிற்றாப்பொன்னிமேவுழியுற்
றிதமதிகந்தரு மெந்தையகோரன் னெழிலிணையார்
பதமதினெஞ் சுறமூழ்குமின் முத்திபலித்திடுமே. (91)

இடுவாரெவரொருதீபமகோர னெழிற்றிருமுன்
னடுவாரவர்பிறவிப்பகை யன்னூர்க்கமராருமாட்
படுவாரெவர் சுவைப்பாய்சமையர் முன்பார்க்கவைப்பார்
சுடுவாரவலர் சூழ்பசியாற் பிணிதுய்ப்பரின்பே (92)

இன்பேதருவரகோரரிணையடி யெய்தினர்க்கா
ரன்பேயுருவாயவர்திரு வெண் காடடைந்துதளி
பொன்பேரொளிமணி யாதியகொண்டுபுனைமினெண்ணு
முன்பேதருவர்நீர் முன்னியயாவுமம் முன்னவரே. (93)

முன்னவர்யார்க்கும் முளரியரெண்ணிலர் முத்திபெறச்
சொன்னவர் துர்க்கையிலக்குமி வாணிதற் சூழந்துதுதி
பன்னவரந்தருபண்பரகோரர் பரசுகமீ
யென்னவரேற்றவரேர் மிகுபொற்பதமேத்துமினே (94)



ஏத்திடுமெந்தை யகோரரையீவாரெழு பொழிலுங்
காத்திடுமாடகநாபுரமையர் கழலிணைக்கண்
யாத்திடும் யானெனதென்னுஞ் செருக் கறுமன்பருக்குப்
பாத்திடுஞ்சேரும் பவக்கடனீந்திப்பரகதியே. (95)

பரனேசரணம் பனவாசரணம் பழமறையின்
சிரனேசரணம் சிவனேசரணம் சிவாநந்தமா
புரனேசரணம புனிதாசரணம் புரணமய
அரனேசரணம் மகோராசரணமருணலமே. (96)

நல்லாய்சரண நகையாய்சரண நகைமனக
வில்லாய்சரணம் விடங்காசரணம் வினையர்க்குற
வல்லாய்சரண மகோராசரண மனைத்துஞ்செய
வல்லாய்சரண மென்வாழ்வேசரணம் வலியருளே. (97)

வலியாய்சரண மெளியாய்சரணம் மறையினிய
வொலியாய்சரண முணர்வேசரணம் உறுப்பெண்ணுடா
ணலியாய்சரண மகோராசரண மனுரகத்திற்
பொலியாய்சரணம் புராணசரணம் நிற்போற்றினனே. (98)

போற்றியகோரன் றிருநாமம்போற்றி புனைநன்முடி
போற்றி கருணைபொழிமுகம் போற்றி புயங்களெட்டும்
போற்றி மருத்துவற்றன்மய மாக்கிய பொற்கொளியின்
போற்றி பொலன்கழல் போற்றியவன்சொன்னபொன்மறையே()

மறைவாழ்க மாதவர்வாழ்க மகம்மழைமாவரங்கத்
திறைவாழ்க வென்யாய் பிரமவித்தை நடத்தெந்தைதமிழ்
முறைவாழ்க முக்குளநீர்வாழ்க கற்பெனுமொய்குழலார்
சிறைவாழ்க வாழ்கவென்னையன கோரன்பொற்சீரடியே. (100)

ஸ்ரீ அகோரரந்தாதி முற்றிற்று.

---

# ஸ்ரீ ஜகத்குருஸ்துதி,

# நான்ஜீவவாதக்கட்டளைச்செய்யுள்

# &

# ஸ்ரீ அகோரரந்தாதி.



உ

ஸ்ரீ சங்கராயநம:

# ஸ்ரீ ஜகத்குருஸ்துதி.

ஸ்ரீ சங்கரகிங்கரசரணசேகரன்

## சிவாநந்தன் பாடியது.

இது

தஞ்சை

ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

சௌமிய-ஸு வைகாசிமீ

ஸ்ரீ சங்கராயநம:

# ஸ்ரீ ஜகத்குருஸ்துதி.

திங்களுஞ்சீதகங்கையுமணிந்தசெஞ்சடைச்சம்புவேசிவர் [து
பங்கமாம்பிறவிக்கடலிடையழுந்தாவணமிந்தப்பாரின்மீதெழுந்
புங்கநல்லானந்தந்தெவ்வுயிரும்புரப்பவன்றனெனக்குறிக்குஞ்
சங்கரபகவற்பாதநனுடந்தரித்தசற்குருசரண்சரணே. (க)

மெய்யிற்சங்கரன்மேனியொன்றுளிரிடல்வேண்டும்
கையிற்சங்கரவிஜயமொன்றிலங்கிடல்கடனும்
செய்யிற்சங்கரன்றிருப்பணிசெய்யலேசிறப்பா
முய்யிற்சங்கரகிங்கரரூழியமுளுற்றல். (உ)

புந்தியெலாம்புலப்பகைவர்கொள்ளைகொளப்புலந்தயர்ந்தபுலைநா
யேனை, யந்தியெலாந்தன்புகழேயன்போடும்பாடும்வண மருள்
செய்தாண்டா, னந்தியெலாம்வெவ்வேறுநரவுருவந்தாங்கியிந்
ஞாலமீது, வந்தியெலாமாய்ச்சூழச்சிருங்கைவளர்பரன்றறவோ
மன்னன்றனே. (ந

உள்ளன்மின்பிறதெய்வமுரையுணர்வுக்கெட்டாதவொருவன்றன்
னைத், தெள்ளியார்சிறியேங்கடேறலரிதெனப்பதிகஞ்செறிந்த
ரன்னன், வெள்ளமாக்கருணையினன்மேதினியார்க்கெளியானு
வெளிப்பட்டானேல், வள்ளலையச்சங்கரனைச்சிருங்கைவாழ்ம
மணியைவழுத்திவாழ்வீர். (ச

ஈசனேநமக்கிணையந்தவடிவெடுத்துச்சிருங்கவெற்பிலிருந்தானென்
னேசரேபிறிதொன்றைநேசிக்கநினைக்கினியாநீசரன்றோ [னி
பாசமானதுகெடுத்துப்பரவீடுபெறமுயற்சிபலசெய்வானேன்
வாசமார்சிருங்கைவளர்யதிமன்னன்றிருவடியில்வாழ்குவோமே. .

வாரீர்நீர்யாமின்றேமாதொருபாகன் பூமிவந்துமாட்சிச்
சாரீரகஞ்செய்தச்சங்கரனைச்சிருங்கைவளர்தாதைதன்னைக்
காரீரஞ்செய்தார்க்குக்காரென்னக்கருதினர்க்குக்கருணைசெய்யும்
பேரீரமுடையானைப்பிரசமொழிப்பெம்மானைப்பேணிவாழ்வோம்

சங்கரபத்திப்பரவசம்வந்துதலையொடுகாறெரியாமற்
பொங்குமானந்தவாரிதிபுரண்டுபுரண்டிடப்புராரியேபூவி
லெங்கரவொழிக்கவெழுந்தமாவினனேயெழிறிகழ்சிருங்கையி
லெந்தாய், மங்களநிறைந்தகாலடிவந்தவள்ளலேயெனவழுத்திடு
வேன்.
(எ)

யாவுநன்மையாமுடித்திடவேண்டுமென்னிறையே
காவும்வாவியுங்கவின்பெறுகாலடிவந்த
தேவதேவனேசிருங்கைவாழ்தேசிகமணியே
நாவுனற்புகழேதினநவின்றிடநல்கே.
(அ)

சங்கரபத்திநம்மைத்தன்வசப்படுத்திஞானப்
புங்கவர்போற்றவைக்கும்பொய்யிலைமெய்யென்னெஞ்சே
சிங்கையில்விளங்குஞ்சீமான்றிருவடிதொழுவார்தங்கள்
செங்கமலச்சீர்ப்பாதஞ்சென்னிமேற்சூடிவாழ்வோம்.
(கூ)



மறைவழியொழுகுமாதவனேனுமாட்சிசான்மானமா மறையின்
சிறைகடந்தொழுகுஞ்சிதடனுயிடினுஞ்சிருங்கையிற்றிகழுநந்தே
வைக், கறைகெழுகண்டமறைத்தெலாவளனுங்கவினுறுங்காலடி
வந்த, விறைவனையெண்ணுமடியவர்க்கடியானெனிலவனென்பர
குருவே,
(கO)

அருங்கலையாத்துத்தவநனியியற்றியற்பனுமிந்திரன்சிவிகை,
பெருங்கிளர்தடந்தோணைந்திடச் சுமக்கும் பெரியர்யாவருந் தவ
நாணச், சிருங்கைவாழ்நமதுதேசிகமணியின்சிவிகைதாங்குநரரு
ட்செல்வ,ரிருங்கமலச்சீரடிச்செருப்படியாயிருக்கயாந்தவஞ்செய்
தோமிலமே.
(கக)

இலமதிலுறுகவனமதிலுறுகவெரியிடையிருக்குகவெதியாய்க்
குலநிலைக்கிணங்கக்குளிர்நடையுடையராகவேகுலவுககூறுத்
தலமதிலுறுகசசிதரனன்பர்தக்கவரெனச்சொனேன்சிவனே.
புலமுறப்பூவில்வந்தசங்கரனேற்புறத்தெவன்புகழ்மினப்புகழே.

முன்னைநாள்வந்தியிட்டபிட்டுண்டுமுக்கணற்கேயிதிங்கமையு
மன்னையேயென்னப்புகன்றதைமானவரவணிவேணியைத்தன்
னிற், பின்னமாய்ப்பேசிப் புகழ்வதை யறியாப்பேதையர்சிருங்
கையிற்பெம்மான், றன்னையேயன்றிப்பரசிவம்வேறுசாற்றுவர்த
மைப்பதெப்படியே.
(கஉ)

விண்டுவாதியர்வேறுவேறுருக்கொடுவேண்டுந்
தொண்டுசெய்தனவரதநற்றோத்திரஞ்சொல்லி

மண்டுமோனந்தவாரியாழ்சிருங்கைமன்மன்றங்
கண்டுகொள்ளலுமெளிதுகொல்கவிநிகர்மனமே. (௧௪)

ஏனங்கானவனிந்தனமள்ளன்மண்ணெடுப்போன்
வானந்தார்கடல்வலைஞனுய்மறைப்பொருண்மண்மேன்
மானந்தப்பியதறிந்துயர்வருணமாச்சிரம
ஞானந்தந்தருள்யதிவரகுரவனுநயந்தான் (௧௫)

தீனபந்துவென்றுரைக்குநிற்றிருமறைசிறியேற்
கானபந்துநின்றனைவிடயாரையாவருள்வாய்
ஞானபந்துவேநாகரேமனிதராய்ஞாலத்
தேனபந்துறந்திறைஞ்சிடும்சிருங்கைவாழிறைவா. (௧௬)

சங்கரன்புகழேபேசித்தரணியிற்சஞ்சரிப்பே
னங்கவனெனக்குச்செய்தவருளினையாரேதேர்வார்
சங்கையில்பரமானந்தசாகரமாக்கினானற்
சிங்கையிற்றிகழுமன்னன்றிருவடிபோற்றிபோற்றி. (௧௭)

சச்சிதானந்தமானதனிப்பொருள்சகத்திலுள்ளோர்
மெச்சுதன்றிருவடிக்கீழ்மேவியானந்தராக
வச்சுதனுதிவானோர்பதியெலாமடிக்கீழ்வைகு
முச்சிதக்காலடிக்கணுதித்தாருவகையோடும். (௧௮)

அழிவிலாததோர்வீடெனலானந்தமாகு
மொழியுமஃதுறப்பற்பலசாதனமுறையே



கழியவிற்றினினின்றதுதருவதுகருணை
விழியதன்றிவேறென்றிலைச்சிருங்கைநம்வேந்தின். (௧௯)

என்னையென்னுடைத்துணைவர்காள்பவப்பசியெரியாற்
றன்னையேமறந்தயர்வதுதாரணித்தாயின்
றென்னையார்தடங்கொங்கைகள்கைலையேசிருங்கை
பின்னைநம்பசிதீர்த்திடவந்தபேரமுதே (௨௰)

சிருங்கையிலிலங்குமெங்கள்சங்கராபோற்றிதேவர்
பெரும்பொருள்போற்றிவாணிபீடமீதமர்ந்தோய்போற்றி
யரும்பொனேபோற்றியாசையற்றவர்க்கருள்வோய்போற்றி
யிரும்புநேர்மனங்குழைத்திங்கென்னையுமெடுத்தாள்போற்றி. ()

துறவிகளேறேபோற்றிசுரேச்சுரர்க்கருள்வோய்போற்றி
மறவியிங்கொழித்துன்பாதம்வணங்கிடவருள்வாய்போற்றி
யறவினையதுவேயல்லாலன்னியமுன்னேன்போற்றி
குறவர்கடவத்தோர்க்காக்குங்குளிர்சிங்கைக்குரவபோற்றி. (௨௨)

குராமனுங்கூந்தன்மங்கைக்கொடியிடைதனையுங்கோல
வராமினுமணியுநீத்திவ்வறவுருக்கொண்டவேந்தே
சராசரமனைத்துமானோய்தண்ணருள்வடிவில்யானு
மொராளெனிற்கருணையெற்குமுண்டெனலுறுதியன்றே. (௨௩)

சங்கரனென்னநின்னைச்சகத்திடையாரேதோரார்
பொங்குமாவலியினாலேபுலமகளும்பர்போகத்

தங்கிடவிடைபிற்செய்தாய்தாரணித்தலங்கணண்ணி
யங்குளசத்தியெல்லாமடக்கினையந்நாளின்றே (௨௪)

வ்ருகவெப்பிறப்புமாதோர்பாகவெவ்வயக்குமேக
குருபரசிருங்கவெற்பிற்குலவுநன்மணியேநாளும்
பெருமைசேர்சிவிகைதாங்கும்பெரியர்பாதுகையென்சென்னி
மருவிடவருள்செய்வாயேல்வாழ்குவன்மாமாவள்ளால். (௨௫)

சிருங்கவெற்பினிலெஞ்ஞான்றுஞ்சித்தினகரனேயாகி
யொருங்கொழிந்திடவஞ்ஞானவிருளன்பருள்ளந்தோறும்
பெருங்கிருபையாமாரிபெய்திடுமுகிலாயென்றன்
மருங்கிலும்வாழுமையன்மலரடிவழுத்துகின்றேன். (௨௬)

வழுத்திடவொண்ணுன்சிங்கைமன்னவன்மலர்மென்பாத
மழுத்திடவெளியேம்புன்மைச்சிரஞ்செய்தவருமைமிக்க
மூழுத்தவம்யாதோவன்னுன்முத்துமாமணிகண்மின்னும்
பழுத்தநற்பவளப்பல்லக்கெடுப்பவர்பதநாஞ்சேர்வோம். (௨௭)

பாடுமாமறைகள்சிங்கைப்பரமனைப்பரவைஞால
மாடுமாருனந்தாத்தியவனியிலவதரித்த
சூடுமாமதிநல்வேணித்தூயனைத்தொழுவார்பாத
நாடுமாறெய்திநெஞ்சேநமக்கினிப்பெறுவதுண்டோ. (௨௮)

சங்கரக்கருணைவெள்ளஞ்சகமெலாம்விழுங்குங்காலை
யெங்கெளியோமைத்தள்ளும்யாமதிற்பெரியோமேயோ



நங்குணங்குற்றமெல்லாநாடியோவருள்வனுதன்
சங்கையிங்கென்னேநெஞ்சேதயவுக்குந்தடையொன்றுண்டோ.

தவநிறைபெரியரெல்லாஞ்சச்சிதானந்தமேனிச்
சிவனருட்சிருங்கைவேந்தின்சேவடிவாழாநின்று
ருவமையிலெளியேமென்னேயுஞற்றுவமுலகமெல்லாம்
பவமொறீஇயின்பமெய்தப்பணுமவன்பதங்கடாமே. (௩0)

தேவர்கள்போற்றுமேலாஞ்சிருங்கைமாவள்ளனைப்
பூவலர்சிவிகைமீதுபோந்திடும்போதுநெஞ்சே
பாவலர்போற்றும்பல்லக்காளர்நற்பாதஞ்சூடப்
பூவினிற்புதைந்துவாழிற்புன்மைதீர்ந்தின்பம்பொங்கும். (௩௨)

கடையரையுயர்ந்தோராக்குங்கடனையேகடனுக்கொண்ட
தடையிலாக்கருணைவாரிசங்கரகுருராஜேந்திர
னுடையனேயடிமையாகவுலகம்யாவையுமன்னனை
மடமையாற்போற்றூர்வாழார்வாழ்த்துநாம்வாழ்குவோமே. (௩௩)

வாழ்வெனல்வானேர்போற்றும்வளநிறைசிருங்கைவள்ளற்
சூழ்திருவடியாரம்பொற்றிருவடிசூடலேயாங்
காழ்தருநெஞ்சமிந்துகாந்தமாமதிகண்டென்ன
வூழ்வினைத்தீமைநீங்கவுருகியேபாடவேண்டும். (௩௩)

வேண்டுவர்விண்ணேரெல்லாமெய்யுணர்வின்பமேனி
யாண்டவன்சிருங்கையையனடியவர்க்கடிமைசெய்ய

நாண்டுறவாதுநெஞ்சேநாயினேமடியமாகிக்
காண்டுமெக்காட்சியென்றுகழறலென்கருதுவாயே. (௩௪)

கழறிடவொண்ணுக்கீர்த்திக்கடவுள்காலடியிற்றோன்றி
யுழறிகிரியைநேர்பவ்வமொழிந்தியாமுவகையெய்த
வழகுசால்சிருங்கையுற்றுவாழ்வதையறியீரந்தோ
விழலுக்குத்துலேமுன்றிட்டீர்வீணெலாம்விட்டுவாழ்த்தீர், (௩௫)

செப்பருங்கருணேமேனிச்சிருங்கைமாதேசிகன்ற
னெப்பருஞ்சிவிகைதாங்குமுத்தமர்பணிசெயிற்பின்
றப்பறுநூல்களெல்லாமோதியேதடையிலாது
மெய்ப்பொருளுணர்ந்துவீடுமேவலால்விசேடமென்னே. (௩௬)

கலேபலகற்றுப்பொருளெலாமுணர்ந்துகாண்பதுகாண்பவனுதி
யலேவெலாமொழிந்தேயானந்தவாரியாடிடலதுநமக்கெளிதாய்
மலேயமாநாடுற்றருள்வளர்சிருங்கைமால்வரைவளருமேயாகிற்
புலேயரேமிங்குப்புரள்வதென்சென்றுபோற்றுவம்பொருவில்
பொன்னடியே. (௩௭)

நிலேயிலாவுடலேநிலேயெனநினேந்துநிகமமார்சிருங்கையான்பணியிற்
றலேயிடாய்வாளாசாற்றுவாயாவுந்தன்னமுந்தனமுதன்மூன்றும்
வலேயிடைநின்றுநீங்கிலேமாசார்மனத்தவர்க்கருளுமோவள்ளல்
சிலேநிகர்மனமேசியுனேச்சேர்ந்தென்செத்திலாய் செய்வதென்செ
ப்பே. (௩௮)



சிறியரேமுய்யச்சிருங்கைவீற்றிருக்குந் தேவனேத்தேசிகமணியை
வெறிகொள்வீண்மனத்தார் மேவிடவொண்ணுவேதமாமுடியனே
விண்ணோர், செறிபவமொழிப்பச்சீட கோடிகளாய்த்தினம்பலது
திசெயறெரிந்தும், வறிதுமுன்காலங்கழித்தனனினிமேல்வாழ்கு
வனவனருள்பெற்றேன். (௩௯)

தேன்வணங் கினியமொழி யுடன்றிருக்கண் பொழிந்திடுமெருண்ம
ழைசேர்ந்து, வான்மண்பாதலங்கண்மூன்றையும்விழுங்கிமானந்
தவடிவமாக்குவதோர், கானந்துசிருங்கைக்கடவுளேவணங்கிக்க
ழலிணேக்கடியராகாதே, யேனந்தராகித்திரிவதிங்கினியாமிருக்கி
லமேகுவமின்றே. (௪௦)

இனியனவுளவோவேழைமாநிலத்தீரிவ்வுலகிடரொழிந்தின்ப
நனியுறநாரிபாகனேநந்தியாதியர்நரர்களாய்ச்சூழப்
பனிவரைமாதுகருணேயேயாகப்பாரினிற்பரமகேரளத்திற்
றனியொளிர்மேன்மைக்காலடிவந்தசங்கரன்சரணிணேயன்றி ()

கண்டமாகியவிருத்திகளொழிந்துனகான்மலர்முடிசூடி
மண்டவானந்தவாரியிலனுதினம்வாழ்ந்திடவருள்செய்வாய்
தொண்டர்நெஞ்சினுற் றுன்பெலாந்தொலேந்திடச் சுடர்விடுசுகக்
குன்றே, யண்டர்போற்றிடுஞ்சிருங்கைவாழத்தனேயருட்பெருங்
கடனீயே. (௪௨

அடியனேன்றீமையத்தியோரேழுமகிலமுமணுவெனவறையும்
படியெனவிருக்குமாயினுப்பண்பார்சிருங்கைவாழ்பரம்பின்கருணே

கொடியளவிற்கும்பற்றிடாதாயினுதலுவதென்னுதல்விழியாய்
படியருள்நினதுபதமலர்நினைவும்படுதலாலுளதுயும்பரிசே. (சந)

தந்தையைச்செகுத்துத் தாயினைச்சேர்ந்த தனைநிகர்பாவியைத்த
ண்ணு, ரந்தமிலருளாலாண்டமாமணியேயழகுறைசிருங்கைவாழ
த்தா, சிந்தையைநினதுசேவடிக்கண்ணேசிக்கெனச்செறித்திடல்
வேண்டு, முந்தையென்றிறங்கண்முன்னிடலாகாமுழுப்பெருங்க
ருணைமுந்நீரே.
(சச)

ஆனந்தவெள்ளஞ்சிங்கையசலநின்றுன்வெற்பண்ணுங்
கானந்தம்பொழில்சூழ்மேன்மைக்காலடிதன்னைநோக்கி
வானந்தனகட்டுளாகவளர்ந்தளாய்வருவதக்கால்
பானந்தவழியினிற்பேனுதலாலாடன்மெய்யே. (சரு)

மெய்யெலாமெய்யானந்தமேவிடவிதுவார்சென்னி
யையனேர்ச்சிருங்கைவாழுமப்பன்றனருண்மனத்திற்
பொய்யெலாமொழியவின்னேபுகுந்துமன்புகவிக்க
செய்யவாயன்னுன்சிரேசெப்புமென்செய்கேன்யானே. (சசு)

மின்னெனத்தோன்றிவீழுமிவ்வுடலை மெய்யெனவெண்ணியேவீ
ணிற், பொன்னிலமாதியீட்டிப்பின்புன்மையின்பிணைப்புசிக்கமன்
முயல்வ, தென்னையிங்குரையா யியம்பியும்பலகாலிரும்பினும்வ
ியவாதனைக, டுன்னியேயீர்ப்பவிடயமே நினைந்து சுழல்வதென்
சிருங்கையைத்துதியே.
(சஎ



துதித்துவிண்ணவர்கடொழுதனுதினமுஞ் சூழ்ந்திடுந்துறவர்நல்
வேந்தே,விதித்துநல்வழியிற்செல்கெனமனத்தைவிடயமேவிரும்
பியேகுவதே, மிதித்திதையுன்பொற்கழலிணையமரவினையனேன்ற
ன்னையுமாள்வாய், நதித்துறைமணிகள்ஞாயிறுவெள்கநகுசிங்கை
வரையுறைநாதா.
(சஅ)

நாதநீயல்லாற்பிறிதொருதெய்வநனவன்றிக்கனவினுநாடேன்
வேதநீடழகார்சிருங்கையில்வாழும்வேதியாவினைபொடிபடநின்
பாதமார்தூளென்சிரமிசையணியப்பரமநல்லருள்பணல்வேண்டு
மோதநீர்க்கடற்பாருவகைமாவுததியுற்றிடவொளிருமுத்தமனே.

என்னையேமனமேயையனே யடைந்தேயியம்பவுந்துதி நினக்கெ
ளிதோ, பொன்னையேமனையாக்கொண்டவன்புகலவெட்டிடாப்பு
கழ்மையனன்றே, பின்னையோர்சிவிகைதாங்கிடும்பெரியர்பின்செ
லும்பெரியர்பாதுகைத்தூ, டன்னையே சிரத்திற் றங்கிடக்கிடைக்
கிற்றரணியிற்சரியெவர்நமக்கே.
(ருo)

சிருங்கைவாழ்நமதுதேசிகமணியின்சிவிகைதாங்கிடுமகாசித்தர்
மருங்கிலேதிரிந்தேயவரடிமலரைவருடிநாம்வாழ்ந்திடவாய்க்கிற்
கருங்கலேய்மனமேயுன்புரையொழிந்தேகனிந்துமாசுககனமா
கிப், பெருங்கனவுலகமயக்கெலாமொழிந்தேபேசொணுநிலைபெற
லாமே.
(ருக)

பொன்னுலகுறுமாண்புத்தமிர்திருக்கப்புற்கையைவிரும்பிடுபுந்
திக், கென்னுரைசெய்வேனின்பமேவடிவனிணையிலாவின்பமேயி

வோன், றன்னிகர்கருணைச் சாகரமிந்தத் தாரணியுய்ந்திடச்சிருங்
கை, மன்னியுஞ்சென்றுவணங்கிடாதந்தோமண்முதல்விரும்புமா
வகமே. (ருஉ)

குவிகையராகித்தேவர்போற்றிடுஞ்சிருங்கைக்கோமான்
சிவிகைதாங்குநர்பொற்பாதச்செருப்பலோஞ்சகடமீர்க்குந்
திவியவானுண்ணுமேன்மைத்திரணமாய்ப்பிறந்தோமல்லோந்
தவிடுநாமல்லோமென்னேதரணியிற்சனித்தபேறே (ருங)

தோமுறுவிடயந்தன்னிற்சுகமுளதென்றுநாளு
மேமுறுமனமேயொன்றிங்கியம்புகேனினிதுகேட்டி
யாமுறுசடையான்மண்ணோராநந்தவுததியாடத்
தேமுறுகானுர்சிங்கையமர்ந்தனன்சென்றுபோற்றே. (ருச)

மனத்திருள்போக்கவேறுமந்திரம்வேண்டாமாந்தீர்
புனத்திருள்புழைக்கைக்கோட்டின்முத்தமேபோக்கும்பொன்
தனத்திருஞ்சிருங்கைநாதன்சன்னிதிதன்னினின்று [ரூத்
வனத்திருப்பெருந்தீவர்த்திதாங்கிடின்வாய்மைதானே. (ருரு)

வாயருட்சிருங்கைவேந்தின்வண்மையேவழுத்தநெஞ்சம்
போயவன்றிருவடிக்கேபொலியவிக்காயம்பொன்னர்
தூயநற்பல்லக்காளர்தொண்டதேசெய்யவின்னே
மாயவன்போற்றுமன்னன்வரமதுவழங்கல்வேண்டும். (ருசு)

உயிரினுக்குயிராயுளந்தொறுமுண்மையொப்பிலாவுவகையாயொ
ளிரும், செயிரிலாச்சிவமேசிருங்கைமாவரையிற்றிகழ்வதுதெரிகி



லார்சிறியர், பயிரினையோம்பப்பாயபேய்த்தேரைப்பாய்ச்சிடநினை
ப்பவர்கடுப்ப, வயிர்தருமனத்தோடலைந்துபல்வினைகளாற்றுவர
றைவதென்யாமே. (ருஎ)

உலகவர்க்குறுதியுரைத்ததுபோதுமுன்னுகவுயும்வழிமனமே
பலபலவெண்ணியாவதோர்பயனென்பரசுகம்பாருளோர்க்களிப்
னிலவணிவேணிசிருங்கைமாவரையினிலவுமாதேசிகனிகரின் [பா
மலரடிவணங்குமாதவரடியில்வணங்கிநீவரங்கிடக்குதியே. (ருஅ)

முனிவரர்போற்றுஞ்சிங்கைமுன்னவன்முன்புநின்று
தனிதநேர்பேரிதாக்கித்தயங்கிடும்பேறுபெற்ருற்
றனியொளிர்ப்ரகதாரண்யஞ்சாற்றிடுமெந்தப்பேறு
நனியுறன்மெய்ம்மைநெஞ்சேநாமினிச்செல்குவோமே. (ருகூ)

நச்சுவார்க்கினியநாதன்ஞாயிறுதடமேசெல்லு
மெச்சுவார்சிருங்கவெற்பன்வேதியன்விருதுவான
வச்சுவமேய்க்குமாளாயமர்ந்திடப்பெற்ருன்மாயைப்
பிச்சுவந்தேறுதின்பப்பெருங்கடற்பிறங்கலாமே. (சு0)

போகுதல்வருதலில்லாப்பூரணப்பொருளாநாமே
சாகுதல்பிறத்தல்போலக்கண்டிடச்சாலஞ்செய்யு
மாகுதபவளச்சிங்கைவரையிலேஞானபாநு
வாகுருபரனுயீசன்வாழ்கின்ருன்வாழ்த்திவாழ்மின். (சுக)

